


# சொல்வயல்

## திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழிவளம் நெல்வளமே நாட்டின்வளம்

" சொற்குவை தேரும் பாவலர் மேவத் தொகுப்பீடம்"
(திருவிளையாடற்புராணம்–
தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்)

ஐ.எஸ்.பி.என் (ISBN): 978-81-958032-0-0

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 6 விளைச்சல் : 63 திருவள்ளுவர் ஆண்டு 2056, கடகம் (ஆடி) – ஆகத்து – 2025







# கைத்தறித் துறைக் கலைச்சொற்கள்

| | | |
|---|---|---|
| Art silk | – | செயற்கைப் பட்டு |
| Automatic loom | – | தானியங்கு தறி |
| Back rest | – | பாவு தாங்கி |
| Bleached yarn | – | சலவை நூல் |
| Blow room | – | பஞ்சு அடிக்கும் அறை |
| Cloth roller | – | துணி உருளை |
| Coarse yarn | – | கரட்டு நூல் |
| Cone yarn | – | நூற் கூம்பு |
| Creel | – | நூற்கண்டு மாட்டி |
| Doubling machine | – | நூல் திரிப்புப் பொறி |
| Embelishment | – | அழகூட்டல் |
| Embroidery | – | பூத்தையல் |
| Frame looms | – | சட்டத் தறிகள் |
| Hand looms | – | கைத்தறிகள் |
| Pedal loom | – | மிதித்தறி |
| Power loom | – | விசைத்தறி |
| Press machine | - | அழுத்து பொறி |
| Radiant yarn | – | பளபளப்பான நூல் |
| Sizing | – | மெருகூட்டல் |
| Spinning mill | – | நூற்பு ஆலை |
| Textile industry | – | நெசவுத் தொழிலகம் |
| Tie up | – | பொதிதல் |
| Treading order | – | நடைமுறை வரிசை |
| Warping machine | – | பாவு பொறி |
| Winding machine | – | சுற்றுப் பொறி |

சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.


# சொல்வயல்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு
திருவள்ளுவர் ஆண்டு 2056, கடகம் (ஆடி) **ஆகத்து – 2025**

| | | |
|---|---|---|
| ஆசிரியர் | : | திருமதி **க. பவானி**<br>இயக்குநர் (மு.கூ.பொ.) |
| பொறுப்பாசிரியர் | : | முனைவர் **வே. கார்த்தி** |
| இதழ்க்குழு | : | திரு. **கி. இராமர்**<br>திரு. **ஏ. காந்தி**<br>திருமதி. **க. கத்தூரி** |



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர்,
சென்னை – 600 028.
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com

Directorate of Tamil Etymological Dictionary Project,
First floor, Urban Administrative office Campus,
No:75,Santhome high Road,
MRC Nagar, Chennai–28
Mail id : solvayal@gmail.com
Website : www.sorkuvai.com



ஐ.எஸ்.பி.என் (ISBN):978-81-958032-0-0

# தமிழ்ச் சொற்பிறப்பு அறிவோம் – 'தெள்' 'தேய்'

தமிழ்ச் சொற்பிறப்பு வரலாற்றை ஆய்ந்த மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர், 'தெள்' 'தேய்' என்னும் சொற்களிலிருந்து பல சொற்கள் கிளைத்து வளர்ந்த முறையினைக் கீழ்க்காணுமாறு விளக்கியுள்ளார்.

**தெள்**

தெள் – தெள்ளு = மாவைத் தெளிவாக்கு, தூய்மையாக்கு

தெளி = தெளிவாகு, ஐயந்தீர், உருத்தேறு

தெளிவு = பதநீர்

தெரி = தெளிவாக அறி, தெரிந்துகொள்

தேர் = தெளிவுபெறு, திறம் பெறு, ஆராய்

தேறு = தெளி, உருப்படு, தேர்வில் வெற்றிபெறு

தேறல் = தெளிவு, உறுதி

தேற்றாங் கொட்டை = நீரைத் தெளிவாக்கும் ஒரு கொட்டை

தேன் = தெளிந்தது

தேன் – தீ – தீவு, தித்தி, தெவிட்டு

**தேய்**

தேய் – தேயு = தேய்ந்துண்டாகும் நெருப்பு

தேய்வு – தேவு, தேவன் = நெருப்புத் தன்மையுள்ள தெய்வம், கடவுள்

தேய் – தெய்வு – தெய்வம்

தேவு – தே

தேய் – தீ = நெருப்பு

தீ – தீமை, தீங்கு

தீம்பு = தீயின் தன்மை, பொல்லாங்கு

தீவம் – தீபம் = விளக்கு

தீ – தீய் = சுண்டு, காய், வாடு.

இவ்வாறு தமிழ்மொழியின் சொற்பிறப்பு வரலாறு குறித்து மொழிஞாயிறு பாவாணர் எழுதியுள்ள செய்திகளை நாமும் உணர்ந்து வருங்காலத் தலைமுறையினருக்கும் உணர்த்தி அவர்களின் உள்ளங்களில் தாய்மொழிப் பற்றை விதைப்போம்.

# அகரமுதலியும் இலக்கணமும்



முனைவர் இரா.கு.ஆல்துரை

தமிழ்நாட்டரசின் வீரமாமுனிவர் விருதாளர்

மொழி மாந்தனால் உருவாக்கப்பட்டது; பார்வை, சைகை ஆகியன எண்ணங்களைத் முழுமையாகத் தெரிவிக்கும் ஆற்றல் உள்ளனனவாக இல்லை என்பது உறுதியான போது, மாந்தனால் தன் எண்ணங்களைத் தெரிவிக்கும் வழிமுறையாக மொழி கண்டுபிடிக்கப்பட்டது. அது படிப்படியாக, அடுத்தடுத்த தலைமுறைகளின் கூட்டு முயற்சியால் வளர்ந்து வந்துள்ளது (Max Muller 1965:30). நீண்டகாலமாக வளர்ச்சி பெற்று வந்துள்ள மொழி தொல்காப்பியம், கழக இலக்கியங்கள், பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள், மறவனப்புகள் (காப்பியங்கள்) போன்றவற்றின் நாம் போற்றும் சிறப்பான மொழியாட்சி அளவிற்கு முழுமை எய்தியுள்ளது. மொழி என்னும் பெயர்ச்சொல்லுக்கு மூலமாக உள்ள மொழிதல் என்னும் வினைச்சொல்லுக்குச் சொற்றிருத்தமாகப் பேசுதல் (பாவாணர் 1949:49) என்னும் பொருள் இருப்பதே அதன் செம்மைத் தன்மையைக் காட்டுகிறது எனக் குறிப்பிடலாம். அதாவது மொழி செம்மைப் பெறாத நிலையிலிருந்து படிப்படியாகச் செம்மை பெற்று இன்றுள்ள நிலையை எய்தியுள்ளது.

கருத்துப் பேணிடம் "மாந்தனைத் தவிர எந்த விலங்கும் எண்ணுவதில்லை; எந்த விலங்கும் பேசுவ தில்லை. மொழியும் எண்ணமும் பிரித்துக்காண வியலாத வகையில் இணைந்தே இருக்கின்றன. எண்ணம் இல்லாத சொற்கள் உயிரற்ற ஒலிகள்; சொற்கள் இல்லாத எண்ணங்கள் வெறுமனானவை. எண்ணுவதே தாழ்நிலையில் பேசுவதாகும். பேசுவது உரக்க எண்ணுவதாகும். சொல் என்பது எண்ணத்தின் தோற்றரவம்" (MaxMuller 1965:321).

எண்ணுதல் மாந்த வாழ்வில் ஓர் இன்றியமையாத செயற்பாடு; இது மூளையில் நிகழும் ஓர் அடிப்படைச் செயற்பாடு. இது ஓர் அகவயச்செயற்பாடு. மேலும், இது ஓர் அறிதிறன் வழிமுறை (cognitive process) ஆகும். எண்ணுவதால் எண்ணங்கள் அதாவது கருத்துகள் தோன்றுகின்றன. கருத்துகள் முதன்மையாக மொழிவழியே வெளிப்படு கின்றன.

"மாந்த மனத்திலிருந்து வெளிப்படும் கருத்தில் முதல் புறவடிவமாகச் சொல் விளங்குகிறது. சொல்லே கருத்தின் நிலையான பேணிடமாகவும் விளங்குகிறது" (Max Muller 1987:முன்.x). "ஒவ்வொரு சொல்லும் பொருள் குறிக்க வேண்டுமென்பது, மாந்தன் பேச்சின் இன்றியமையாத இலக்கணமாகும். ஒரு மொழியில் ஒலித்திரிபு தோன்றியவுடன், இவ் விலக்கணத்தை அம் மொழி யிழந்துவிடுகிறது" என்று மாக்கசு முல்லர் கூறுகிறார் (பாவாணர் 2023:120). "எல்லாச் சொல்லும் பொருள்குறித் தனவே" (தொல். 639) என்றார் தொல்காப்பியர். "சொற்கள் பெரும்பான் மொழிகளிற் காலந்தோறும் வேறுபடுகின்றமையின், அவற்றின் மூலவடிவை யறிந்தே பொருள் காண வேண்டும்" (பாவாணர் 2023:115).

சொல்லும் பொருளும் மொழிபற்றிய அதாவது, சொல், தொடர், பொருள் போன்றவை பற்றிய எண்ண வோட்டம் மிகப் பழங்காலம் தொட்டு இருந்து வந்துள்ளது. மொழியின் அமைப்பில் சொல்லின் பொருள், குறிப்பாகச் சொல்லுக்கும் அதன் பொருளுக்கும் உள்ள தொடர்பு விளக்குவதற்குச் சிக்கல் வாய்ந்தது. ஒரு சொல்லில் அடங்கி உள்ள பொருளை மனத்தால் பற்றுதல் குறிப்பிடத்தக்கது. மொழியின் அமைப்பைப் பொறுத்தவரையில் சொற்களில் ஒரு முறையான அமைப்பு ஒழுங்கு உள்ளது என்பதில் அறிஞர் களிடையே ஒத்த கருத்து நிலவுகிறது. மொழியில் குறியீடுகள் சேர்ந்து சொற்களா கின்றன. சொற்கள் சொற்றொடர்கள், சொற்றொடரியங்கள் (வாக்கியங்கள்) ஆகின்றன. சொல், சொற்றொடர் ஆகிய இரண்டினையும் சார்ந்ததாகச் சொல் இருக்கிறது. சொல்லும் பொருளுடன்தான் இருக்கிறது. அதேபோல் சொற்றொடரும் பொருளோடு தான் இருக்கின்றது. இவ்வாறு இருக்கும்போது சொல், சொற்றொடர் ஆகிய இரண்டில் எது அடிப்படை ஆனது என்று கூறுவதற்குக் கடினம். இவ்விரண்டனுள் சொல் அடிப்படையான பொருள் உடையது என்று கூறுவதற்கும் சொற்றொடரே அடிப்படையானது என்று கூறுவதற்கும் இடம் உண்டு. இவை இரண்டில் சொல்லும் சொற்றொடரும் தனித் தனியாக இயங்கும் தன்மையன அல்ல. அவை இரண்டும் ஒன்றை ஒன்று சார்ந்த நிலையில் மொழி அமைப்பில் இடம் பெறுகின்றன. அமைப்பு அடிப்படையில் சொற்களே அடிப்படையானவை. அடுத்த நிலையில் சொற்கள் சேர்ந்து தான் சொற்றொடர் உண்டாகின்றன. "பண்பட்ட மொழியில் ஒரு கருத்தைத் தெரிவிப்பது பெரும்பாலும் சொற்றொடரே யாயினும் ஒவ்வொரு மொழியும் சொற்களாக வன்றிச் சொற்றொடர்களாகத் தோன்றாமையால், உண்மையில் மொழி என்பது முழுநிறைவான சொற்றொகுதியே" (பாவாணர்,1967:72). எந்த

மொழியிலும் பொது மக்கள் வாயிலாகத் தோன்றும் சொற்கள் எல்லாம் இயல்பாகப் பொருளுடன்தாம் இருக்கும். குறிப்பாகத் தனிச்சொற்கள் பொருளுடன் இருக்கும். அதைப்போல் தனிச்சொற்கள் சேர்க்கையான கூட்டுச்சொற்களும் பொருளுடன்தாம் இருக்கும். தொடக்கத்தில் ஒரு சொல்லுக்கு ஒரு பொருள் என்றவகையில் இருக்கும். காலவோட்டத்தில் தேவைக்கேற்ப ஒரு சொல் ஒன்றிற்கும் மேற்பட்ட பொருள்களைக் கொண்டனவாகவும் இருக்கலாம். ஒரு சொல் இந்த அளவிற்குத்தான் பொருள் கொள்ள வேண்டும் என்னும் மேல் எல்லை எதுவும் இல்லை.

"இப்பொழுது ஒட்டுகள் என அழைக்கப்படும் இலக்கண ஈறுகள் முன்னர் தனியான சொற்களாக இருந்துள்ளன. அவை தனியான பொருள்களையும் தமக்கென தனியான நோக்கங்களையும் கொண்டிருந்தன" (MaxMuller 1965:178). ஒப்பீட்டு மொழியியல் அடிப்படையில் ஒரு குடும்பமொழிகளின் ஒட்டுகளின் மூல வடிவங்களை நிறுவி, அதன் பிறகு, அவற்றைத் தனியான சொற்களுக்குக் கொண்டு சென்று,அவற்றின் மூல நோக்கங்களையும் பொருள்களைக் கண்டறிதல் அவ்வொட்டுகளின் தன்மையைக் காட்டுவதாக இருக்கும்.

ஒரு மொழிக்குப் புதிய சொற்கள் தேவை ஏற்படும்போது கையாளும் முறைகளில் மிகவும் நேரடியானது வேறொரு மொழியிலிருந்து சொற்களைக் கடன் வாங்குவது. இதுவல்லாமல் மொழியின் சொந்தக் கூறுகளிலிருந்து ஒரு புதிய சொல்லை உருவாக்கலாம் (எ.கா: முன்னரே இருந்த கிழங்கு என்னும் சொல்லுடன் உருண்டையாக இருக்கும் அதன் பண்பை உணர்த்த உருளை என்பதை இணைத்து உருளைக் கிழங்கு என்னும் சொல் உருவாக்கியுள்ளது). ஏற்கெனவே உள்ள ஒரு சொல்லின் பொருளை விரிவுபடுத்தலாம் அல்லது மாற்றலாம்.

மொழி மாற்றம் "மொழிகள் எப்பொழுதும் இயங்கும் நிலையில் இருக்கின்றன. அவை எப்பொழுதும் ஒவ்வொரு விளக்கத்திலும் நிலையானவையாக இருப்பதில்லை. ஆனால் அவை ஒவ்வொன்றும் ஒரு தலைமுறையின் அளவில் கூட மாறக்கூடிய தன்மைகளைக் கொண்டுள்ளன. இது மொழியின் செயல்பாட்டில் தவிர்க்க முடியாத விளைவு ஆகும். இதே வகையில் தான் மொழி ஒரு தலைமுறையிலிருந்து அடுத்த தலைமுறைக்குக் கொண்டுசெல்லப்படுகிறது" (Otto Jesperson 1924:31).

ஒலி, சொல், பொருள் என்னும் மூவகையிலும் ஒரு மொழி திரியும் (பாவாணர் 2023:127). மொழி காலந்தோறும் மாறும் இயல்புடையது. பழைய இலக்கியங்கள், ஆவணங்கள், பதிவுகள் ஆகியன உள்ள மொழியின் மாற்றத்தை அதன் இலக்கியங்கள், ஆவணங்கள் போன்றவற்றுடன் ஒப்பிட்டுத் தெரிந்துகொள்ளலாம். இலக்கியங்கள் எனக் குறிப்பிடும்போது பொதுவாகச் செம்மையான வடிவங்களே இலக்கியங்களில் இடம்பெறுவதற்கு இடம் உண்டு. ஆகையால் செம்மைத் தன்மையோடுதான் ஒப்பிட வேண்டும் என்று எடுத்துக்கொள்ள வேண்டியது இல்லை. பழங்காலத்து எழுத்துப் பதிவுகள் இருக்க வேண்டும் என்பதுதான் கருத்து. காலந்தோறும் புதியதாக வரும் பொருளையும் கருத்தையும் குறிக்கப் புதுச் சொற்கள் பிறக்கின்றன. அதேபோல் காலந்தோறும் வழக்கிழந்து வரும் பொருளையும் கருத்தையும் குறிக்கும் சொற்கள் வழக்கிழந்தும் வருகின்றன. புதுச் சொற்களும் அம் மொழியிலிருந்து வந்த பழைய சொற்களிலிருந்தே உருவாக்கப் படுகின்றன. "ஒரு கருத்தினின்று மற்றொரு கருத்துத் தோன்றும்போது, ஒரு சொல்லினின்று மற்றொரு சொல் பிறக்க இடமுண்டாகிறது. கருத்து வேறுபடும்போது சொல்லும் வேறுபடல் வேண்டும். அன்றேல் பொருள் மயக்கம் உண்டாவதோடு மொழியும் வளர்ச்சியுறாது. இதுவே சொல்லாக்க அடிப்படை நெறிமுறை" (பாவாணர் 1973:முக.9). வழக்கிழந்த சொற்களின் பதிவுகளும் இருக்க வேண்டும். அப்பொழுதுதான் பிற்காலத்தில் முன்னர் இருந்த நடைமுறைகளை அறிந்துகொள்ள இயலும். அவ்வகையில்காலந்தோறும்மொழிச்சொற்களைப் பதிந்துவைக்கும் பணி இன்றியமையாதது ஆகிறது. மொழிப் பதிவுகளின் இன்றியமையாமையை எடுத்துரைக்கும் வகையில் எபிரேய மொழியின் மீட்டுருவாக்கம் இருப்பதைக் காணலாம்.

பழைய ஏற்பாட்டின் பெரும்பகுதி எபிரேய மொழியில் எழுதப்பட்டுள்ளது. எபிரேயம் கி.மு. 12 முதல் 2 ஆம் நூற்றாண்டு வரை வழக்குமொழியாக இருந்துள்ளது. கிமு 3ஆம் நூற்றாண்டு முதல் பாலத்தீனத்தில் உள்ள யூதர்கள் பேச்சு, வழிபாடு ஆகிய இரண்டிலும் அராமிக்கு மொழியைப் பயன்படுத்தத் தொடங்கினர். பாலத்தீனத்திற்கு வெளியே உள்ள யூதர்கள் தாங்கள் குடியேறிய நாடுகளின் மொழிகளில் பேசினார்கள். எவ்வாறாயினும் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேலாக இலக்கியம், வழிபாடு ஆகியவற்றின் மொழியாக எபிரேயம் பாதுகாக்கப்பட்டு வந்துள்ளது. பல நூற்றாண்டுகளாக, அவ்வப்போது எபிரேய மொழியில் இருந்த இலக்கியப் பதிவுகளைப் புதுப்பித்தும் வந்துள்ளனர்.

எபிரேய மொழி, செமிடிக் மொழிக் குழுவைச் சார்ந்தது. இது பொனீசியன் (Phoenician), மோவாபய்டு (Moabite) ஆகிய மொழிகளுடன் நெருங்கிய தொடர்புடையது. இது பழங்காலத்தில் பாலத்தீனத்தில் பேசப்பட்ட மொழி. கி.மு. 3ஆம் நூற்றாண்டு தொடக்கத்தில் அராமிக்கு மொழியின் மேற்கத்திய பேச்சுவழக்கால் வழக்கிழந்தது. இருந்தாலும், இம் மொழி வழிபாட்டுமொழியாகவும் இலக்கிய

மொழியாகவும் தொடர்ந்து இருந்துவந்துள்ளது. இதில் குறிப்பிடத்தக்கது என்னவென்றால் வழக்கு இழந்த இம்மொழியை அதன் பதிவுகளைக்கொண்டு சென்ற இரு நூற்றாண்டுகளில் பேச்சு மொழியாகப் புதுப்பித்துள்ளனர். எல்லாவற்றிற்கும் மேலாக அது இன்று இசுரேலின் ஆட்சிமொழியாக அதிகாரம் பெற்றுள்ளது.

இக்கால எபிரேயம் விவிலிய மொழியின் அடிப்படையில், இக்காலத் தேவைகளை நிறைவு செய்யும் வகையில் வடிவமைக்கப்பட்ட பல புதுமைகளைக் கொண்டுள்ளது. இலக்கிய மொழியை அடிப்படையாகக் கொண்ட பேச்சுமொழியாக இது விளங்குகிறது. இம்மொழி தேவையான சொற்களை எபிரேய சொற்றொடர்களி லிருந்து உருவாக்கிக் கொள்கிறது. சமகால மொழிகளிலிருந்து கடன் வாங்கியும் தன் தேவைகளை நிறைவேற்றிக் கொள்கிறது. ஒரு சில சொற்களை விவிலிய சொல்லாட்சி யிலிருந்து மீட்டுருவாக்கம் செய்து கொள்கிறது. விவிலிய எபிரேயத்தின் சொற்களஞ்சியம் சிறிய எண்ணிக்கை கொண்டது. அவற்றிலிருந்து இன்றைய தேவைக்கேற்ப பெரும் எண்ணிக்கையிலான சொற்களை இம்மொழி உருவாக்கிக் கொண்டுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

"மொழியிலுள்ளது மிகச் சிறியதாக, இன்றியமையாமை அற்றதாக இருந்தாலும் அது பொருளுடன் இருக்கும் போது இன்றியமையாத தாகிறது" (Bloomfield 1935:27). பொருள் மாற்றத்தைக்கொண்டு குறிப்பிட்ட சொல்லின் பொருள் மாற்றத்தைப் பற்றிய கருதுகோளை உருவாக்கிக் கொள்கின்றனர். இந்தக் கருதுகோளைப் பொதுவான பொருள் மாற்றத் தன்மைகளுடன் வைத்து ஆராய்ந்து பார்த்துக் கொள்கின்றனர். சான்றுக்கு, குறிப்பிட்ட பொருள்மாற்றம், அதே வகையில் மாற்றம் ஏற்பட்டுள்ள பிறமொழிச் சொற்களுடன் ஒப்பிட்டுப் பார்த்துக் கொள்கின்றனர்.

பொதுவாகப் புதியதாக உருவாக்கும் சொற்களின் மூலம் வெளிப்படையாகத் தெரிவதாக இருக்கும். காலக் கடப்பில் சொற்கள் ஒலிமாற்றம், பொருள் மாற்றம் ஆகியவற்றால் எளிதில் விளக்கம் காணாத் தன்மை எய்திவிடுகின்றன.

உலகத்துப் பல பாகங்களில் பேசப்படும் மொழிகளையும் அவற்றின் கிளை வழக்குகள், வட்டார வேறுபாடுகள் ஆகியவற்றையும் பார்த்தால் இம் மொழிகள் பல நூற்றாண்டுக் காலமாகப் பெருமளவில் மாற்றம் அடைந்து வந்துள்ளதைக் கவனிக்கலாம். காலவோட்டத்தில் ஏற்படும் மொழி மாற்றங்கள் பெரும்பாலும் விரைவாகவே நடந்து வருகின்றன. மொழி மாற்றம் எல்லாக் காலங்களிலும் நடந்து வருகிறது. நாகரிக மற்ற குடிகள் மொழிகளில் ஏற்படும் மொழி மாற்றங்கள் (தாறுமாறாக) மிக வேகமாக ஏற்படுகிறது என்று நம்பலாம். ஆனால் அம் மொழிகளுக்கு எழுத்து வடிவம் இல்லாத நிலையில் நம்பத் தகுந்த மாற்றக் குறிப்புகளை அவற்றிலிருந்து பெற முடியாது.

மொழிகள் எப்பொழுதும் மாறும் நிலையில் இருக்கின்றன. அவற்றின் ஒவ்வொரு கூறும் ஒருபோதும் நிலையாக இருக்கா. அவை ஒவ்வொன்றும் ஒரு தலைமுறைக் காலத்திலும் கூட மாறக்கூடிய தன்மைகளைக் கொண்டுள்ளன. இது மொழியின் இயல்பில் தவிர்க்க இயலாத நிலையாக உள்ளது. இவ்வகையிலேயே, மொழி மாற்றத்துடன் ஒரு தலைமுறையிலிருந்து அடுத்த தலைமுறைக்குக் கொண்டு செல்லப்படுகிறது (Otto Jesperson 1924:31).

இலக்கணமும் சொற்களஞ்சியமும் ஒரு காலக்கட்டத்து மொழியைப் பற்றி அறிந்துகொள்ள அடிப்படையாக இலக்கணமும் சொற்களஞ்சியமும் உதவுகின்றன. தொல்காப்பியத்தைக் கொண்டு அக்கால மொழி இலக்கணத்தை ஏறக்குறைய முழுமையாக அறிந்துகொள்ளலாம். அதே நேரத்தில் அக்கால வழக்கில் இருந்த சொற்களை முழுவதுமாக இலக்கியங்கள் கொண்டுள்ளனவா என்றால் இல்லை என்றுதான் சொல்ல வேண்டும். இலக்கணமும் சொற்களஞ்சியமும் மொழியின் அலகுகள். மொழியில் இவை இரண்டும் இணைந்தே செயல்படுகின்றன. இவை இரண்டையும் தனித் தனியாக விளக்கும் திறன் சொல்லாய் வறிஞர்களிடம் மிக்கூர்ந்து காணப்படுகிறது. சொல்லாய்வில் இலக்கணத்தை இரண்டாம் இடத்தில் வைத்துச் சொல்லாய்வையே முதன்மையாக விளக்குவது பெரும்பான்மை. சொல் ஒரு குறிப்பிட்ட காலத்தில் குறிப்பிட்ட தனித்தன்மையுடன் இருக்கும். அவ்வாறு இருப்பதற்கான புறக்காரணிகளை அறிந்திருக்க வேண்டியது சொல்லாய்வாளருக்குத் தேவையாகிறது.

தமிழ்ச்சொற்கள், குறிப்பாகப் பழந்தமிழ்ச்சொற்கள் கலப்பற்ற தூயனவாக இருந்துள்ளன. அறப்பழங்காலத்தில் தமிழோடு தொடர்பு கொள்ளும் வகையில் மொழி எதுவும் அதன் தொடர்பில் இருக்க வில்லை. இது அன்றைய தமிழ் தூயதாய் இருந்ததற்கு அடிப்படைக் காரணமாகும். அவ்வகையில், பெரும்பான்மையான இடங்களில் தமிழ்ச்சொற்களின் வேர்மூலங்களை இனமொழிகள் ஒப்பீடு எதுவும் இல்லாமல் தமிழ் மொழியிலேயே காணவேண்டியுள்ளது. அறப் பழங்காலத்தில் தமிழுக்கு இனமொழி என்று எதுவும் இருக்கவில்லை. அன்றைய கிளைவழக்கு களிடையே காணப்பட்ட வேறுபாடும் சிறிய அளவினதாக இருந்திருக்க வேண்டும் என்று உய்த்துணரலாம்.

பண்பாட்டுத் தொடர்பினால் சொற்கள் ஒருமொழியிலிருந்து இன்னொரு மொழிக்குக் கடன் கொள்ளப்படுகின்றன. ஆகையால் சொற்களை வைத்து ஒரு மொழியை இன்னொரு மொழியோடு

உறவுள்ள(குடும்ப) மொழி என வகைப்படுத்துவது பொருத்தமாக இருக்காது. உறவுள்ள மொழிகள் என வகைப்படுத்துவதற்கு இன்றியமையானது இலக்கண அமைப்பு. மொழிகள் எந்த அளவிற்குச் சொற்களைப் பிறமொழிகளிலிருந்து கடனாகப் பெற்றாலும் தங்கள் இயல்பான இலக்கண அமைப்புகளைத் தக்க வைத்திருக்கும்.

## அகரமுதலியும் இலக்கணமும்

ஒரு மொழிக்கு அகரமுதலியும் இலக்கணமும் இன்றியமையாதன. இந்த இரண்டில் சற்றொப்ப மொழியின் அனைத்துக் கூறுகளையும் விளக்கி விடலாம். பெயர், வினை, பெயரடை, வினையடை, இடை போன்ற சொல்வகைகள் (parts of speech) அடிப்படையில்தான் மொழிச்சொற்கள் வகை பிரிக்கப்பட்டு அகரமுதலியில் குறிக்கப்படுகின்றன. ஆகச் சொல் நிலையில் அவை மொழியின் இலக்கணத் தன்மைகளைக் காட்டி நிற்கும். பிறகு அச் சொற்களின் பொருள்களும், சில இடங்களில் அவற்றின் பயன்பாட்டு முறைகளும் கொடுக்கப்படுவதால் பெரும்பான்மையான மொழியின் தன்மையை அகரமுதலி காட்டிவிடும். மேலே குறிப்பிட்டுள்ள தன்மைகளுடன் சொற்கள் ஒன்றோடொன்று இணையும் தன்மை, அடையும் மாற்றம், முக் காலங்களில் வினைச்சொல் புடைபெயரும் வகை முதலியவற்றை இலக்கணம் விளக்கி நிற்கும். இத்தன்மைகளையும் காட்டும் வகையில் அகரமுதலி உருப்பெறும் வகையில் அமைதல் சிறப்பானது. இங்கு நாம் இலக்கணம் எனக் குறிப்பிடுவது ஏனோ மொழியிலிருந்து அப்பாற்பட்டது எனக் கொண்டுவிடக்கூடாது. ஒரு மொழி பேசப்பட்டு வருகின்றது என்றால் அது இலக்கணத்துடன்தான் இருக்கிறது என்பது பொருள். அக் கூறுகளைத் தனியே எடுத்து விளக்குவதைத்தான் நாம் இலக்கணம் எனக் குறிப்பிடுகிறோம். அகரமுதலி, இலக்கணம் ஆகியவற்றால் ஒரு மொழியின் கூறுகள் அத்தனையும் விளக்கி விடலாம் என்று சொன்னாலும் இலக்கணத் தன்மைகளையும் உள்ளடக்கியதாக அகரமுதலி உருவாக்கும்போது அகரமுதலி சற்றொப்ப மொழித்தன்மைகள் அனைத்தையும் விளக்குவதாக அமையும். அதனால்தான் அகரமுதலியை இலக்கணத்தின் பின்னிணைப்பு என்றும், ஒழுங்கற்ற வடிவங்களின் பட்டியல் என்றும் குறிப்பிடு கின்றனர் (Bloomfield 1996:274). அகரமுதலியில் இடம்பெறும் சொற்களும் அவற்றிற்குக் குறிப்பிடும் பொருள்களும் உரிய முறையில் அமைய வேண்டும். அகரமுதலிகள் முடிந்தவரை இடத்தைச் சேமிக்க முயல்கின்றன. இதற்காக ஓரிடத்தில் வந்த செய்தி மீண்டும் வராமல் இருக்குமாறு பார்த்துக்கொள்கிறது.

"மொழியியல் தன்மைகளை ஒழுங்கமைப்பதற்கான சிறந்த வழியைக் கருத்தில் கொள்ளும்போது, இலக்கணம், அகரமுதலி (சொல்லியல்) ஆகியவற்றுக்கு இடையேயான ஓர் இன்றியமையாப் பிரிவை எதிர்கொள்ள நேரிடுகிறது.. இலக்கணம் மொழியின் பொதுவான உண்மைகளையும், சொற்களஞ்சியம் சிறப்பு உண்மைகளையும் கையாள்கின்றன. பூனை என்னும் சொல் குறிப்பிட்ட ஒரு விலங்கைக் குறிக்கிறது, இது அந்தச் சொல்லை மட்டும் சார்ந்த ஒரு சிறப்பு உண்மை. ஆனால் பன்மை ஈற்றைச் சேர்ப்பதன் மூலம் பன்மை உருவாவது ஒரு பொதுவான உண்மை, ஏனென்றால் இது எலிகள், தொப்பிகள், பணிகள், புத்தகங்கள், தலைவர்கள் போன்ற பல சொற்களைப் பற்றியது" (Otto Jesperson 1924:31–32).

## அகரமுதலியும் கலைக்களஞ்சியமும்

அகரமுதலி, சொற்களை வரிசையாகப் பட்டியலிடும் பார்வைப் புத்தகம். பெரும்பான்மை சொற்களை அகரவரிசையில் அவற்றின் பொருள்களுடன் அகரமுதலி கொண்டிருக்கும். பொருள் சொல்லின் இயல்வரையறையாய் அமைவது சிறப்பு.. கூடுதலாகச் சொல்லின் பலுக்கல் குறிப்பு, செயல்பாடுகள், சொற்பிறப்பியல், தொடரியலில் வரும்போது பெறும் தனித்தன்மைகள், செம்மை வழக்குகள், ஒரு பொருள்பன்மொழிகள், எதிர்ச்சொற்கள் போன்ற செய்திகளை அகரமுதலி கொண்டிருக்கலாம். ஓர் அகரமுதலி சொல்லின் பயன்பாட்டைக் காட்டும் மேற்கோள்களையும் கொண்டிருக்கலாம். மேலும் குறிப்பிட்ட பொருளில் சொல்லின் தொடக்கக்காலப் பயன்பாடுகளைச் சுட்டிக் காட்டலாம். அடிப்படையில், அகரமுதலி சொற்களின் தொகுப்பையும் அவற்றைப் பற்றிய செய்திகளையும் பட்டியலிடுகிறது.

பொதுவாக அகரமுதலி ஆயிரக்கணக்கான சொற்களையும் அவற்றின் இயல்வரை யறைகளையும் கொண்ட தொகுதியாக இருக்கும். ஒரு சொல்லின் பொருளைச் சரிபார்க்க அகரமுதலி பயன்படுகிறது. அதே நேரத்தில் அச்சொல்லைப் பற்றிய விரிவான விளக்கத்தை அறிய கலைக்களஞ்சியம் பயன்படுகிறது. கலைக் களஞ்சியங்கள் அகரமுதலிகளைக் காட்டிலும் மிகுதியான பொது அறிவுச் செய்திகளைக் கொண்டிருக்கும். அகரதமுதலி ஒரு சொல்லின் பலுக்கல், தோற்றம், பயன்பாடு ஆகியன குறித்த செய்திகளைக் கொண்டிருக்கும். அதே நேரத்தில் கலைக்களஞ்சியம் அந்தச் சொல்லின் இன்றியமையாமையை உணர்த்துவதாக இருக்கும். ஓர் அகரமுதலி ஆயிரக்கணக்கான சொற்களை உறுப்படிகளாகக் கொண்டிருக்கும். ஆனால் கலைக்களஞ்சியம் குறைவான சொற்களை உறுப்படிகளாகக் கொண்டிருக்கும்; அச்சொற்களின் விளக்கத்திற்கு மிகுதியாக இடம் அளிக்கப்பட்டிருக்கும். இருமொழி அகரமுதலிகள் இரண்டாம் மொழி கற்பவர்களுக்கு இன்றியமையாத கருவிநூலாக அமைகிறது.

மொழியியல் உண்மைகளை ஒழுங்கமைப்பதற்கான சிறந்த வழியைக் கருத்தில்

கொள்ளும்போது, இலக்கணத்திற்கும் அகரமுதலிக்கும் இடையிலான மிக இன்றியமையாத பிரிவை நாம் எதிர்கொள்கிறோம். இலக்கணம் மொழியின் பொதுவான உண்மைகளைக் கையாள்கிறது. ஆனால் அகரமுதலி (சொற்களஞ்சியம்) சிறப்பு உண்மைகளைக் கையாள்கிறது. அதே நேரத்தில் இக்கால அகரமுதலிகள் முடிந்தவரை இலக்கணச்செய்திகளையும் இடம்பெறச்செய்கின்றன. பெயர்ச் சொற்களும், வினைச் சொற்களும் இயல்வரையறைகளுடன் அகரமுதலியில் இடம்பெற்றிருக்கும். இவற்றைச் சொற்களைப் பற்றிய சிறப்பு உண்மைகள் எனக் கொள்ளலாம். அதே நேரத்தில், பன்மையீறு, வேற்றுமை உருபு, கால இடைநிலைகள் போன்ற இலக்கணத்தில் இடம்பெறும் பொதுவான தன்மைகளையும் அகரமுதலியில் இடப்பெறச்செய்து விடுகின்றனர். இன்னும் சொல்லப்போனால் இவற்றிற்கு சான்றுகளும் அகரமுதலியில் இடம்பெற்று விடுகின்றன. அவ்வகையில் இக்கால அகரமுதலிகள் முடிந்தவரை இலக்கணச் செய்திகளையும் இடம்பெறச்செய்வதற்கு முயல்கின்றன என்பது குறிப்பிடத்தக்கது.

### பேச்சு மொழி

மொழி மாந்தனுடன் இருக்கிறது. அது பேசப்படுவதால் வாழ்கிறது. அதைக் கேட்போர் இல்லாமலாகும் போது பலுக்கும் ஒவ்வொரு சொல்லுடனும் இறக்கிறது. மொழி எழுத்துமொழியாக மாறியதும் எழுத்து இலக்கியத்தின் கருவியானதும் முற்றிலும் தன்னேர்ச்சியானது. இன்றும் பெரும் எண்ணிக்கையிலான மொழிகள் எழுத்தில்லாமலும் இலக்கியம் உருவாக்காமலும் இருக்கின்றன.

எழுத்து உருவாகாத மொழிகளில் சொற்கள் இருக்கின்றன. இலக்கணங்கள் இருக்கின்றன. எழுத்து அமைப்பு கொண்ட மொழிகளைப் போலவே எழுத்து அமைப்பு அமையாத மொழிகளிலும் அனைத்து மொழிக் கூறுகளும் இருக்கின்றன. இவற்றுக்கு மேலாக எழுத்து பெற்ற மொழிகள் சிலவற்றில் மக்கள் வழக்கிழந்தவை இடம் பெற்றிருக்கக்கூடும். அதாவது இலக்கணம், இலக்கியம், அகரமுதலி போன்றவற்றில் வழக்கிழந்தவை இடம் பெற்றிருக்கும். அம்மொழியைப் பேசுவோருள் ஒரு சிலர் வழக்கிழந்தவற்றை விடாப்பிடியாகப் பயன்படுதிவருவதற்கு இடம் உண்டு. ஆனால் எழுத்து உருவாகாத பேச்சு மொழிகளில் இவ்வாறான பேச்சுக்கே இடமில்லை. வழக்கிழந்தவை அங்குத் தேங்கி நிற்க வாய்ப்பே இல்லை. ஆகையால் பேச்சு மொழிகள் என்றும் இக்கால மொழிகளாய், வாழ்மொழிகளாய், நடைமுறை அமைப்பு மட்டும் கொண்டதாய் விளங்கிச் சிறப்புற்றிருக்கும். தமிழ் போன்று இலக்கியம் பேச்சு ஆகிய இரு வழக்குகள் உள்ள இடங்களில் பேச்சுமொழியை இலக்கியமொழி ஓரளவிற்கேனும் கட்டுப்படுத்தி வரும். அவ்வகையில் மொழித்திரிபு பெருமளவில் காக்கப்படுகிறது.

உண்மையில் "எழுதப்படுவது மொழியன்று. கண்ணுக்குக்குத் தெரியும் குறிகளால் மொழியைக் குறித்து வைக்கும் முறையே எழுத்து. சீனம், எகுபது, மெசபட்டோமியா போன்ற சில நாடுகளில் ஆயிரக் கணக்கான ஆண்டுகளுக்கு முன் எழுதும் முறை இருந்துள்ளது. ஆனால் இன்று உலகத்தில் பேசப்படும் மொழிகளில் பெரும்பாலானவை அண்மைக் காலங்களில் எழுத்து வடிவம் பெற்றுள்ளன அல்லது எழுத்து வடிவம் பெறாத நிலையில் உள்ளன. அச்சு வரும் காலம் வரை எழுதப் படிக்கும் கலை ஒரு சிலருக்கு மட்டும் தெரிவதாக இருந்தது. அனைத்து மொழிகளும் அம் மொழிகள் வரலாறு நெடுகிலும் எழுத படிக்கத் தெரியாத மக்களால் பேசப்பட்டு வந்துள்ளன. அம் மக்கள் மொழிகள் நிலைப்பாடு, ஒழுங்கு வடிவம் ஆகியன வற்றைக் கொண்ட எழுத்தமைந்த நாட்டுமொழிகளைப் போல் வளமுடையன." (Bloomfield 1996:20). இந்நிலையில் பேச்சுமொழிகளை இலக்கிய மொழிகளைவிடத் தாழ்வானது எனக் கொள்வதை இக்கால மொழியியல் ஏற்றுக்கொள்வதில்லை. அவ்வகையில் பேச்சுமொழிக்கு ஊக்கம் கொடுக்க வேண்டியது இன்றியமையாதது ஆகிறது. மக்கள் திறம்பட மொழியைக் கையாளும் திறன் பெற்றவர்களாக விளங்க வேண்டும். அதுவே இயல்பான மொழிவளர்ச்சிக்குக் கொண்டுசெல்லும்.

### கருவி நூல்கள்

1.)பாவாணர், 1992, சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள், கழகம் (முதற்பதிப்பு 1949)
2.)பாவாணர், 1973, வேர்ச்சொற் கட்டுரைகள், கழகம், சென்னை
3.)பாவாணர், 2023, ஒப்பியன் மொழிநூல், உலகத் தமிழ்க் கழகம், (முதற்பதிப்பு 1940) 4.) பாவாணர், 2023, வடமொழி வரலாறு, உலகத் தமிழ்க் கழகம், (முதற்பதிப்பு 1967)
5.)Bloonfield, Leonard, 1996, Language, Motilal Banarsidas, Delhi (First Published1935)
6.)MaxMuller, 1965, Lectures on The Science of the Language, Munshi Ram Manoharlal, New Delhi (first published 1861)
7.)MaxMuller, F.,1987, Biographies of words and the home of the Aryas, AES, New Delhi (First Published1888)8.)Otto Jespersen, 1924, The Philosophy of Grammar, George Allen & Unwin Ltd., London

# சுடர் தந்த சுல்லும் நூல்லும்



இரா. திருமாவளவன்
தேசியத் தலைவர்,
மலேசியத் தமிழ்நெறிக் கழகம், மலேசியா

பாவாணர் கண்டறிந்த சுட்டடி முளை மூன்றாகும். அவை அல், இல், உல் எனவாகும். இவை உணர்ச்சி ஒலிகளான ஆ, ஈ, ஊ என்பனவற்றினின்று உருவானவை. முந்தை மாந்தன் இடங்களைச் சுட்டும் நிமித்தமாக எழுப்பிய ஒலிகளே இவை.

தொலைவைச் சுட்டுதற்குப் பயன்பட்டதே ஆகாரம். தொலைவைச் சுட்டுதற்கு வாயைப் பிளந்து விரித்து ஆ எனச் சொல்லுதல் வேண்டும். இயல்பாகவே அகன்ற வாய்ச் செய்கை சேய்மையைச் சுட்டுதலாயிற்று. இதனால் இதனைச் சேய்மைச் சுட்டு என்பர். அண்மையைச் சுட்டுதற்குப் பயன்பட்டதே ஈ. பிளந்து அகற்றிய வாயை கீழ் இறக்கினால் மேலுதடும் கீழுதடும் நெருங்கும்; நெருங்கி இளித்தலால் ஈ எனும் ஒலியே வெளிப்பட்டது. நெருக்கத்தில் இருப்பவனவற்றைச் சுட்ட இது பயன்பட்டது. எனவே இஃது அண்மைச் சுட்டு எனப்பட்டது. உதட்டைக் குவித்தால் முன்னோக்கிச் சுட்டும். இக்கால் எழும் ஒலியே ஊ என்பது. முன்னால் இருப்பனவற்றைச் சுட்ட இவ்வாய்ச் செய்கை பயன்பட்டது. இதனால் இதனை முன்மைச் சுட்டு என்றனர்.

ஆ > அ > சேய்மைச் சுட்டு

ஈ > இ > அண்மைச் சுட்டு

ஊ > உ > முன்மைச் சுட்டு

இவற்றுள் ஊகாரச் சுட்டே பல்லாயிரச் சொற்களுக்கு மூல வித்து என்பார் பாவாணர். ல் , ம், ய் எனும் இயல் மெய்கள் ஊகாரத்தோடு ஒட்டி முதல் ஆணிவேர் முளையாய்த் தோன்றின. இவற்றுள் உல் எனும் முளைப்பையே பாவாணர் பெரிதும் காட்டுவார்.

முச்சுட்டடி வேர்களையும் அவை உணர்த்தும் பொருள்களையும் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் நெறிமுறைகளில் பேரா. முனைவர் இரா. மதிவாணன் கீழ்வருமாறு வகைப்படுத்தியுள்ளார்.

பாவாணர் கண்டறிந்த 54 கருத்து வேர்கள்

1 அம் >பொருந்தற் கருத்துவேர்

2. அர் >அறுத்தற் கருத்துவேர்

3. இல் >இளமைக் கருத்துவேர்

4. இள் > இணைதற் கருத்துவேர்

5. உ > முதன்மைக் கருத்து வேர்

6. உம் > கூடுதல் கருத்துவேர்

7. உய் >செல்லுதல் கருத்துவேர்

8. உல் >எரிதல் கருத்துவேர்

9. உல் >வளைதல் கருத்துவேர்

10. உல் >உள்ளொடுங்கல் கருத்துவேர்

11. உள் >துளைத்தல் கருத்துவேர்

12. ஊது >ஒலிக்குறிப்பு

13. ஏ >தன்மைப் பெயரடி

14. ஒல் >பொருந்தல் கருத்துவேர்.

15. ஓ >ஒலிக்குறிப்பு

16. கல் >கருமைக் கருத்துவேர்

17. குல் >கூடல் கருத்துவேர்

18. குல் >வளைதல் கருத்துவேர்

19. குல் >தோன்றல் கருத்துவேர்

20. குல் >குத்தல் கருத்துவேர்

21. குல் >எரிதல் கருத்துவேர்

22. குல் >துளைத்தல் கருத்துவேர்

23. சுல் >குத்தல் கருத்துவேர்

24. சுல் >சுடுதல் கருத்துவேர்

25. சுல் >சிவத்தல் கருத்துவேர்

26. சுல் >வளைதல் கருத்துவேர்

27. சுல் >துளைத்தல் கருத்துவேர்

28. துல் >பொருந்தல் கருத்துவேர்

29. துல் >வளைதல் கருத்துவேர்

30. துல் >துளைத்தல் கருத்துவேர்

31. துல் >தெளிவுக் கருத்துவேர்

32. நுல் >தோன்றல் கருத்துவேர்

33. நுல் >துளைத்தல் கருத்துவேர்

34. நுல் >நெகிழ்ச்சிக் கருத்துவேர்

35. நுல் >நோதல் கருத்துவேர்

36. நுல் >நீட்சிக் கருத்துவேர்

37. நுல் >பொருந்தல் கருத்துவேர்

38. புல்> பொருந்தல் கருத்துவேர்

39. புல்>பருத்தல் கருத்துவேர்

40. புல்> திரட்டல் கருத்துவேர்

41. புல்> விரும்பல் கருத்துவேர்

42. புல் > வளைதல் கருத்துவேர்

43. புல் > துளைத்தல் கருத்துவேர்

44. முல் > இளமைக் கருத்துவேர்

45. முல்> முன்மைக் கருத்துவேர்

46. முல்> மென்மைக் கருத்துவேர்

47. முல்> பொருந்தல் கருத்துவேர்

48. முல்> வளைதல் கருத்துவேர்

49. முல்> துளைத்தல் கருத்துவேர்

50. வல்> வளைவுக் கருத்துவேர்

51. வா> ஒரு வினை

52. வள்> விரும்பல் கருத்துவேர்

53. வள்> வெம்மை, ஒண்மை,

வெறுமை, வெண்மைக் கருத்துவேர்

54. வள் > பிளவுக் கருத்துவேர்

இவ்வைம்பத்து நான்கு அடிப்படை வேரடிப் பொருள்களையும் இருப்பத்தொன்பதாய் அவர் மேலும் சுருக்குவார்.

1. அறுத்தற் பொருள் > அர்

2. இணைதற் பொருள் இள்

3. இளமைப் பொருள் > இல், முல்.

4. உள்ளொடுங்கல் > உல்.

5. எரிதற் பொருள் > உல்,குல்.

6. ஒலிக்குறிப்பு > ஊது, ஓ

7. கருமை > கல்

8. குத்தல் > குல், சுல்.

9. கூடல் > உம், குல்.

10. சிவத்தல்> சுல்.

11. சுடுதல் > சுல்

12. செல்லுதல் > உய்

13. தன்மைப் பெயரடி> ஏ

14. திரட்டல் > புல்

15. துளைத்தல் > உள், குல், சுல், துல், நுல்,புல்,முல்

16. தெளிவு > துல்

17. தோன்றல் > நுல், குல்

18. நீட்சி > நுல்

19. நெகிழ்ச்சி > நுல்

20. நோதல் > நுல்

21. பருத்தல் > புல்

22. பிளவு > விள்

23. பொருந்தல் > முல்,அம்,புல்,நுல், துல், ஒல்.

24. 24. முன்மை > உ, முல்.

25. மென்மை > முல்

26. வளைவு > வல், முல், புல், துல், சுல், குல், உல்.

27. வா > ஒரு வினை

28. விரும்பல் > புல், விள்.

29. வெம்மை > விள்.

இவற்றுள்,

தோன்றல், துளைத்தல், குத்தல், சுடுதல், சிவத்தல் எனும் நுட்பப் பொருள்களைக் கருவாகக் கொண்டு ஒளிப் பொருளை நல்கும் சுல், நுல் எனும் இரு வேரடிகளையே நாம் சுருங்கக் காண விருக்கின்றோம். முதற்கண் சுல்லை ஆழ்ந்து நோக்குவோம்.

அறிவியலில் ஒளி வெப்பத்தினின்று எழும். வெப்பமோ தேய்த்தலால், உராய்தலால் நிகழும். ஆற்றல் ஒன்றினின்று இன்னொன்றாய் மாறுதல் போல் வேரடியின் கருத்தும் ஒரு கருத்தினின்று மற்றொரு கருத்தாய் மாறும். இயற்கை அறிவியலில் நிகழும் மாறுதல் போலவே சொல்லறிவியலிலும் மாற்றம் நிகழும் என்பது பாவாணரின் ஆய்வின்வழிப் பெறப்பட்ட உண்மையாகும்.

உல் எனும் வேர் முளையினின்று சுல் எனும் வேரடி உருவாகும்.

உல் > சுல்

இதனின்று பிறக்கும் கருத்துகளாவன

1. குத்தல் கருத்து

2. சுடுதற் கருத்து

3. சிவத்தற் கருத்து

4. வளைதற் கருத்து

5. துளைத்தற் கருத்து

ஆகியனவாகும்.

இவற்றுள், குத்தல், துளைத்தல், சிவத்தல் ஆகியன ஒளிக் கருத்துப் பிறக்கத் துணை புரிவன.

வித்தினின்று முளைவிட்டு முற்பட்ட வேர், நீரைத் தேடி இயங்கும். இவ்வாறான வேர் இயக்கத்தை நுணுகி அறிந்த பாவாணர் அதனைச் சொல் வேர் நகர்ச்சிக்கு மிக அருமையாக ஒப்பீடு காட்டுவார்.

## வேர்

முளைவிட்டு, முற்பட்டு முன் செல்லும்; முன்சென்றது ஒன்றனோடு நெருங்கும்; நெருங்கியது அப்பொருளைச் சேரும்; சேர்ந்து கலக்கும்; சேரலில் தொடலும் ஒட்டலும் பொருந்தலும் அடங்கும். தொடும் வேர் தொடப்படும் பொருளை ( மண் திட்டு) மெல்லிதாயின் குத்தித் துளைக்கும். துளைக்கும் வேளையில் தேய்தலும் உராய்தலும் நிகழும். அதனால் வெப்பம் உண்டாகும். குத்தித் துளைத்தது மீண்டும் அடுத்தப் பக்கம் வெளிப்பட்டுத் தோன்றும். இத்தகு வேர் இயக்க நகர் முறையையே பாவாணர் வேர்ச்சொல் ஆய்வு முறைக்கும் காட்டினார்.

இது மிகச் சிறந்த ஏரண முறைப் பார்வையும் ஆய்வுமாகும். இத்தகு நுட்பமான ஆய்வுப் பார்வைக்கு கூர்த்த மொழி அறிவியல் தேவையானது. இத்தகு அடிப்படையான வேர் முறை வளர்ச்சியைத் தமிழின் சொல்லாக்க கூர்தலற வளர்ச்சியாகவும் நாம் காணலாம்..

இவ்வேர் இயங்கு நிலையில் மூலக் கருத்துகளும் அவற்றிற்கிடையே நிகழும் கிளைக் கருத்துகளும் உருவாகுவதை நுணுகிப் பார்த்து உணரலாம்.

எடுத்துக் காட்டாக, குத்தலும் துளைத்தலும் மூலக் கருத்து எனில் குத்தலாலும் துளைத்தலாலும் ஏற்படும் உராய்வும் தேய்வும் வெப்பமும் கிளைக் கருத்துகளாகும்.

எடுத்துக்காட்டாக, சேர்தலால் நிகழும் கலத்தல் கருத்தினின்று கருமைக் கருத்து உருவாகுவதாகப் பாவாணர் நுட்பமாய் விளக்குவார்.

அதற்கு அவர் சொல்லும் கரணியம், ஒன்றினோடு மற்றொன்று கலக்கும் வேளை அதன் தெளிநிலை மறைந்து கலங்கல் நிலை உருவாகும் என்பதாகும். இதற்குத் தெளிந்த நீரோடு பிற நீர்மங்கள் அல்லது பொருள்கள் கலப்பதால் நீர் தெளிநிலை இழந்து கலங்கி இருள் நிலை அடைவதை எடுத்துக்காட்டாய் விளக்குவார்.

உல் >குல் = சேர்தல், கலத்தல் கருத்து.

உல் > குல் > கல் > கர் >கரு > கருமை

கரு > கருப்பு

எனவாறு கலத்தல் எனும் மூலக் கருத்தினின்று கருமை எனும் கிளைக் கருத்து உருவாகுவதைக் காணலாம்.

தொடரும்....

# மணிப்பொறிகள்



இலக்குவனார் திருவள்ளுவன்
தலைவர் – தமிழ்க் காப்புக் கழகம்

கடிகாரத்தைக் குறிக்கும் ஆங்கிலச் சொல்லான கிளாக்கு (clock) மணி என்னும் பொருளைத் தரும் கிளோக்கா என்னும் செல்திக்கு (Celtic Language) சொல்லில் இருந்து உருவானது. மணி என்பது முதலில் ஒலிக்கும் மணியைக் குறித்தது. மணி அடித்து நேரத்தை அறிவித்ததன் அடிப்படையில் இச் சொல் பின்னர் மணியைக் குறிப்பதாக மாறியது.

பீட்டர் என்கின் என்னும் பூட்டுத் தொழிலாளி கி.பி.1510இல் நிலைக் கடிகாரம் ஒன்றை உருவாக்கினார். கி.பி.1656இல் இயூயன்சு என்னும் ஆலந்து நாட்டுத் தொழில்நுட்ப வல்லுநர் ஊசல் கடிகாரத்தை உருவாக்கினார். இவர் 60 நொடி ஒரு நிமையம், 60 நிமையம் 1 மணி, 24 மணி 1 நாள் என்ற கணக்கீட்டில் கடிகாரத்தை அமைத்தார். இத்தகைய கடிகாரங்கள் முதலில் மரத்தைக் கொண்டு உருவாக்கப்பட்டன; அடுத்து மாழையாலும் (உலோகத்தாலும்) கண்ணாடியாலும் கடிகாரப்பகுதிகள் உருவாக்கப்பட்டன.

கனடா நாட்டைச் சேர்ந்த வாரன் மோரிசன் கி.பி.1927இல் கண்ணாடியால் ஆன கடிகாரத்தை உருவாக்கினார். மின்திறனும் தொடர்ச்சியாக மின்கலனும் பயன்பாட்டில் வந்த பின், மின் கலனைக் கொண்டு இயங்கும் கடிகாரத்தை அலெக்குசாண்டர் பெயின் கி.பி.1840இல் கண்டு பிடித்தார். அதன்பின்னர் வெவ்வேறு மாற்றங்களைக் கடிகாரங்கள் அடைந்துள்ளன.

இருப்பினும் காலத்தைக் கண்டறிய பல்வேறு வழிமுறைகள் தொன்மைக் காலத்திலேயே பயன்படுத்தப்பட்டுள்ளன. காலத்தின் சிறப்பை அறிந்து உணர்த்திய தமிழ் ஆன்றோர்கள், காலத்தின் உட்பிரிவாகிய பெரும் பொழுதுகளையும் பெரும் பொழுதுகளின் உட்பிரிவாகிய சிறு பொழுதுகளையும் வரலாற்றுக்கு முந்தைய காலத்திலேயே பகுத்துள்ளனர். முதலில் இவர்கள் பூவின் மலர்ச்சியைக் கண்டு காலத்தைக் கணக்கிட்டனர். மாலையில் மலரும் முல்லை; அந்தியில் பூப்பது அந்தி மந்தாரை என்னும் சொல் வழக்குகளும் அவற்றின் அடிப்படையிலே தோன்றியவையே.

பிறகு சூரியனின்  இயக்கம் அதனால் உருவாகும் நிழல் இவற்றை அறிந்து அதற்கேற்ப நேரத்தைக் கணக்கிட்டனர். சூரிய இயக்கத்தின் அடிப்படையில் சுமேரியர்களும் நிழலின் அடிப்படையில் எகிப்தியர்களும் நேரத்தைக் கணக்கிடத் தொடங்கினர். அராபியர்களும் இவை போன்ற முயற்சிகளில் ஈடுபட்டு நேரத்தைக் கணக்கிட முயன்றனர். மேலே உள்ள கிண்ணத்தில் உள்ள நீர் அதனடியில் உள்ள மற்றொரு கிண்ணத்தில் சொட்டுச் சொட்டாக விழுவதைக் கொண்டும் விழுந்த நீரின் அளவைக் கொண்டும் கிரேக்கர்களும் உரோமானியர்களும் கி.மு.320 அளவில் நேரத்தைக் கணக்கிட்டனர்.

சூரியன் இல்லாத பொழுதும் நேரமறிய தமிழ் மக்கள் கண்டுபிடித்ததே குறுநீர்க்கன்னல் எனப்பெறும் நாழிகை வட்டிலாகும். அடுத்துச் சிறிய அளவிலான மணிகாட்டியைக் கண்டு பிடித்து அதனை மாலைபோல் கழுத்தில் அணிந்து கொண்டனர். எனவே, அதற்குக் < கடிகைஆரம் > கடிகாரம் எனப் பெயரிட்டனர். (ஆரம் – மாலை) (மணிக்கட்டில்–கையில் கட்டப்படும் கடிகாரம் கைக்கடிகாரம்)

காவிரிப் பூம்பட்டினத்துப் பொன் வாணிகனார் மகனார் நப்பூதனார் என்னும் சங்கப் புலவர்

"பொழுதுஅளந்து அறியும் பொய்யா
மாக்கள்
தொழுதுகாண் கையர் தோன்ற வாழ்த்தி
எறிநீர் வையகம் வெலீஇய செல்வோய்! நின்
குறுநீர்க் கன்னல் இனைத்தென்று
இசைப்ப"

(முல்லைப்பாட்டு: 55, 58)

எனப் பொழுதினை அறிந்து அறிவிக்கும் வல்லோர் நேரத்தைக் குறுநீர்க்கன்னலின் மூலம் கண்டறிந்து தெரிவித்ததாய்க் கூறுகிறார். சிறிய அளவில் நீர் விழும் கிண்ணம் என்பதால் குறுநீர்க் கன்னல் எனப்பட்டது.

வெளியே செல்ல முடியாத நேரத்திலும் சூரியன் காட்சி அளிக்காத நேரத்திலும் மணியைக் கண்டறிய கண்டுபிடிக்கப்பட்டதே குறுநீர்க்கன்னல் என்னும் மணிப்பொறி.

மதுரை ஆசிரியர் நல்லந்துவனார் என்னும் மற்றுமொரு சங்கப்புலவர், கதிரவனின் கதிரைக் கொண்டு காலமறிய முடியாதபடி முகில் சூழ்ந்து அச்சம் தரும் வெள்ளம் பாய்ந்து ஓடும் மழைக் காலத்திலும் குறுநீர்க்கன்னல் மூலமாக நேரம் அறிய முடிவதைக் குறிப்பிடுகிறார். இப்பாடல் வருமாறு:

"குறுநீர்க் கன்னல் எண்ணுதல் அல்லது
கதிர்மருங்கு அறியா அஞ்சுவரப் பாஅய்"

(அகநானூறு: 43:6–7)

தமிழ்த்தேசியப் பெரும்புலவர் இளங்கோ அடிகள் நாழிகைக்கணக்கர் பற்றிக் குறிப்பிடுகிறார். (சிலப்பதிகாரம் 5: 49) (இதற்கான உரையில்

"பூமென் கணையும் பொருசிலையும்
கைக்கொண்டு
காமன் திரியும் கருவூரா – யாமங்கள்
ஒன்றுபோய் ஒன்றுபோய் ஒன்றுபோய்
நாழிகையும்
ஒன்றுபோய் ஒன்றுபோய் ஒன்று"

என்னும் நாழிகை பற்றிய பாடல் மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளது.)

"புலவர் சீத்தலைச் சாத்தனார்
குறுநீர்க் கன்னலின் யாமங் கொள்பவர்"

(மணிமேகலை : 7: 14–15)

இருந்ததைக் குறிப்பிடுகிறார்.

கந்தபுராணத்தில் குடிகை என்னும் நீர்க்கலம் மணிப்பொறியாக விளங்கியிருந்தமை

"அரும்புனல் குடிகை மீது"

என்னும் தொடரில் குறிக்கப்பட்டுள்ளது.

காலச் சூழலுக்கேற்ப மணியை அறியும் பல்வகை மணிப்பொறிகளை நம் முன்னோர் உருவாக்கி உள்ளனர்.

# பவளம் – பவழம்

முனைவர் ஆ. அரிமாப் பாமகன்
மேனாள் ஆங்கில விரிவுரையாளர்
புதுச்சேரி



"முகத்தில் முகம் பார்க்கலாம்! – விரல்
நகத்தில் பவழத்தின் நிறம் பார்க்கலாம்!
வகுத்த கருங்குழலை
மழைமுகில் எனச் சொன்னால்
மலரினை இதழோடு
இணை சேர்க்கலாம்!"
(பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம், தங்கப்பதுமை).

"பூசைக்கு வந்த மலரே வா! பூமிக்கு வந்த நிலவே வா!
பெண்ணென்று எண்ணி பேசாமல் வந்த
பொன் வண்ண மேனிச் சிலையே வா!

செக்கச் சிவந்த இதழோ இதழோ பவளம் பவளம் செம்பவளம்!
தேனில் ஊறிய மொழியில் மொழியில் மலரும் மலரும் பூமலரும்!
(கண்ணதாசன், பாதகாணிக்கை).

*****

"அர் = சிவப்பு, அ – இ. ர் – ல்
அரத்தம் = செந்நீர், அலத்தகம் செம்பஞ்சுக் குழம்பு.
அரக்கு = சிவந்த மெழுகு.
அருணன் = சிவப்பு
அருணம் = காலைச்சூரியன்
அரிணம் = சிவப்பு, மான்."
(பாவாணர், வேர்ச்சொல் சுவடி).

"குரு = 1. ஒளி. "குருமணித் தாலி" (தொல். சொல். 303, உரை). 2. சிந்துரம் (W.). வ. க்ரு (ghr).
குருவெறும்பு = செவ்வெறும்பு, முசிடு. (W.).
குரு – குருதி = 1. சிவப்பு. "குருதித் துகிலின் னுறையை" (சீவக. 926). 2. அரத்தம் (திவா.). 3. செவ்வாய் (திவா.).
ம. குருதி.
குருதிக் காந்தள் = செங்காந்தள் (சீவக. 1651, உரை).
குருதிக்கிழமை (வாரம்) = செவ்வாய்க்கிழமை. "குருதி வாரந் தனக்குக் கொஞ்ச நாளிற் கிழியும்" (அறப். சத. 61)

குரு – குருந்து = மாணிக்க வகையுள் ஒன்று (W.).
குருத்து – குருந்தம் = மாணிக்க வகை (W.).
குருந்தம் – குருவிந்தம் = 1. தாழ்ந்த மாணிக்க வகை. (சிலப். 14186, உரை). 2. குன்றிமணி. 3. சாதிலிங்கம்.

குருவிந்தக்கல் = காவிக்கல். "இரத்தின மறியாதா னொருவன் குருவிந்தக் கல்லோடொக்கும் இதுவென்றால்" (ஈடு. 3:1:2)." (பாவாணர் வேர்ச்சொற் கட்டுரைகள், நூல் 2, பக். 61–62).

குல் > குரு = சிவப்பு.
"குருவும் கெழுவும் நிறன் ஆகும்மே"
(தொல்காப்பியம், உரியியல் 5).
* குரு, கெழு – இரண்டு சொற்களும் நிறத்தைக் குறித்துவருபவை ஆகும்.
** குரு என்பது குறிப்பாகச் செந்நிறத்தைக் குறிப்பதாக உள்ளது.

"குரங்கின் தலைவன் குரு மயிர்க் கடுவன்
சூரல் அம் சிறு கோல் கொண்டு வியல் அறை
மாரி மொக்குள் புடைக்கும் நாட
யாம் நின் நயந்தனம் எனினும் எம்
ஆய் நலம் வாடுமோ அருளுதி எனினே!"
(ஐங்குறுநூறு 275).

உரை: தோழி தலைவனிடம் கூறுகிறாள். அந்தப் பெண்குரங்கின் தலைவன் கடுவன். அது சிவந்த மயிர் கொண்டது. அது சிறிய மூங்கில் கோலைக் கையில் வைத்துக்கொண்டு பாறையில் படர்ந்திருக்கும் பூ மொட்டுகளை அடிக்கும். இப்படிப்பட்ட நாட்டின் தலைவனே! என் தலைவி உன்னை

விரும்புகிறாள். நீ அவளுக்கு அருள் வழங்கினால், அவள் நலம் வாடுமோ? வாடாது.
* குருமயிர்க் கடுவன் = சிவந்த மயிரையுடைய ஆண் குரங்கு.
** சிவ – சிவந்த – சிவப்பு √; சிகப்பு x.

குரு என்பது அளபெடுத்துக் குரூஉ என வரும்.
"அங்கண்மால் விசும்பு புதைய வளிபோழ்ந்து
ஒண்கதிர் ஞாயிற் றூறளவாத் திரிதரும் . . .
செங்கால் அன்னத்துச் சேவல் அன்ன
குரூஉமயிர்ப் புரவி யுராலிற் பரிநிமிர்ந்து
காலெனக் கடுங்குங் கவின்பெறு தேரும்"
(மதுரைக்காஞ்சி: 384–388).
பொருளுரை: ஞாயிற்றின் ஊறல்கண் கூசும்படி வெள்ளை நிறம் கொண்ட அன்னம். செங்கால் அன்னம். அது வானம் புதையும்படி, காற்றைப் பிளந்துகொண்டு விண்ணில்தாவிப் பறப்பது போல், செந்நிறக் குதிரைகள் இழுத்துச் செல்வதால் வெண்ணிறத் தேர்கள் பறந்தன. பறக்கும் திறன் குறைந்த அன்னம் பறப்பது போல் – இல்பொருள் உவமை.

"பரூஉப் பளிங்கு உதிர்த்த பல உறு திரு மணி
குரூஉப் புலி பொருத புண் கூர் யானை"
(மலைபடுகடாம்: 516–517).

"குரூஉக் கண் கொலை ஏறு கொண்டேன்
யான் என்னும்"
(கலித்தொகை 104: 71).

"குறும் தொடி மகளிர் குரூஉப் புனல்
முனையின்" (அகநானூறு 226: 4).
* குரூஉப் புனல் = செந்நிறப் புனல்.

"குருதி அம் குரூஉப் புனல் பொரு களத்து
ஒழிய" ( புறநானூறு 227: 5).
* குரூஉப் புனல் = குருதிப் புனல்.

குரு > குருதி = அரத்தம்.
"உறல் உறு குருதி செருக் களம் புலவக்
கொன்று அமர் கடந்த வெம் திறல் தடக்கை
வென் வேல் பொறையன் என்றலின் வெருவர
வெப்பு உடை ஆடூஉ செத்தனென் மன் யான்
நல் இசை நிலைஇய நனம் தலை உலகத்து"
(பதிற்றுப்பத்து 86: 1–5).
உரை: புண் படுத்துப் பாயும் குருதி, போர்க்களத்தில் புலவு நாற்றம் வீசும்படிக் கொன்று, வெற்றி கொண்ட கொடிய திறன் கொண்ட வலிமையான கையை உடையவன் பொறையன் என்றவுடன் வேர்த்து வியர்க்கும் ஆண்மகன் போன்றவன் ஆகிவிட்டேன். என்றாலும், உண்மையில், அவன் தன் புகழ் நாலாத் திசையும் பரவிக்கிடக்கும் உலகத்தில்,...

குருதிப் பூ = சிவந்த பூ.
"செங்களம் படக் கொன்று அவுணர்த் தேய்த்த
செங் கோல் அம்பின், செங் கோட்டு யானை,
கழல் தொடிசா சேஎய் குன்றம்
குருதிப் பூவின் குலைக் காந்தட்டே!"
(குறுந்தொகை 1).

உரை: இரத்தத்தால் போர்க்களம் சிவக்கும் படி , அவுணர்களைக் கொன்று அழித்துச் சிவந்த நேரான அம்பினையும், சிவந்த கொம்புடைய யானையையும் உழல இட்ட வீர வளையையும் உடைய முருகன் அருள் செய்யும் இம்மலை சிவப்பான கொத்தாக மலரும் காந்தள் மலர்களை உடையது.

"கடவுள் கற் சுனை அடை இறந்து அவிழ்ந்த
பறியாக் குவளை மலரொடு காந்தள்
குருதி ஒண் பூ உரு கெழக் கட்டிப்
பெரு வரை அடுக்கம் பொற்பச் சூர் மகள்
அருவி இன் இயத்து ஆடும் நாடன்"
(நற்றிணை 34: 1–5).

"வயிரும் வளையும் ஆர்ப்ப அயிர
செறி இலைக் காயா அஞ்சனம் மலர
முறி இணர்க் கொன்றை நன் பொன் கால
கோடல் குவி முகை அங்கை அவிழ
தோடு ஆர் தோன்றி குருதி பூப்ப
கானம் நந்திய செம் நிலப் பெரு வழி
வானம் வாய்த்த வாங்கு கதிர் வரகின்
திரி மருப்பு இரலையொடு மட மான் உகள
எதிர் செல் வெண் மழை பொழியும் திங்களில்"
(முல்லைப்பாட்டு: 92–100).

பொருளுரை:

நுண் மணலில் நெருங்கின இலையையுடைய காயா மலர்கள் கண்மைப் போல மலர, தளிரையும் கொத்துக்களையுமுடைய சரக்கொன்றை மரங்கள் நல்ல பொன்னைப் போன்ற மலர்களைக் கொட்ட, வெண்காந்தளின் குவிந்த மொட்டுக்கள் அழகிய கைகளைப் போல் அவிழ, இதழ்கள் நிறைந்த செங்காந்தள் குருதி போல மலர, இவ்வாறு காடு செழித்த சிவந்த முல்லை நிலத்தின் பெருவழியில் மழை பெய்ததால் வளைந்த கதிரையுடைய வரகிடத்தே, முறுக்குண்ட கொம்பினையுடைய ஆண் மான்களுடன் மென்மையான பெண் மான்கள் துள்ள, பெய்வதற்காக எதிரே செல்லும், வெண்ணிறமான மேகங்கள் பொழியும் திங்களில்,..

* குருதி பூப்ப – குருதி போல மலர,

மணி வகைகளுள் ஒன்றான செந்நிற மணி பவளம் என்றும் பவழம் என்றும் அழைக்கப்பட்டுள்ளது.

ல – ள – ழ:

"பவளச் செவ் வாய்ப் பைம் கிளி கவரும்"
(நற்றிணை 317: 4).

"பவள வளை செறித்தாள் கண்டு அணிந்தாள் பச்சை"
(பரிபாடல் 11: 101).

"அணி பவளச் செவ் வாய் அறம் காவல் பெண்டிர்"
(பரிபாடல் 24: 48).

"ஈயல் மூதாய் வரிப்பப் பவளமொடு"
(அகநானூறு பாடல் 14: 3).

[குறுக்குச்சால்:
மூன்றாம் வேற்றுமை உருபு 'ஒடு" சேரும்போது அத்துச்சாரியை கட்டாயமில்லை என்பதற்கு இது சான்று.
வாழ்க வளமுடன் / வாழ்க வளத்துடன் – இரண்டும் சரி.].

"பவளச் செப்பில் பொன் சொரிந்து அன்ன"
(அகநானூறு 25:11).

"பைந் நனை அவரை பவழம் கோப்பவும்"
(சிறுபாணாற்றுப்படை: 164).

"பவழத்து அன்ன மேனி திகழ் ஒளி"
(குறுந் தொகை, கடவுள் வாழ்த்து: 2).

"பவழத்து அன்ன வெம் பூத் தாஅய்"
(பரிபாடல் 14: 16).

"பொன் பவழப் பூக் காம்பின் பொன் குடை ஏற்றி"
(பரிபாடல் 19: 87).

"படையும் பவழக் கொடி நிறம் கொள்ளும்"
(பரிபாடல் 19: 98).

"பவழம் புனைந்த பருதி சுமப்ப"
(கலித்தொகை 80: 5).

"பாவையும் பந்தும் பவள வாய்ப் பைம் கிளியும்
ஆயமும் ஒன்றும் இவை நினையாள் பால் போலும்
ஆய்ந்த மொழியினாள் செல்லும்கொல் காதலன் பின்
காய்ந்து கதிர் தெறூஉம் காடு."
(ஐந்திணை ஐம்பது 33).

"கவளக் களிப்பு இயல் மால் யானை சிற்றாளி
தவழத் தான் நில்லாதது போல் பவளக்
கடிகையிடை முத்தம் காண்தொறும் நில்லா
தொடிக் கையிடை முத்தம் தொக்கு."
(திணைமாலை நூற்றைம்பது 42).

"பவளக் கொழுந்தின் மேல் பொன் தாலி பாஅய்"
(திணைமாலை நூற்றைம்பது 66: 3).

"கவளம் கொள் யானையின் கைகள் துணிக்க
பவளம் சொரிதரு பை போல் திவள் ஒளிய
ஒண் செம் குருதி உமிழும் புனல் நாடன்
கொங்கரை அட்ட களத்து."
(களவழி நாற்பது 14).

"வெறுக்கைக்குச் சென்றார் விளங்கிழாய்
தோன்றார்
பொறுக்க என்றால் பொறுக்கலாமோ ஒறுப்பப்
போல்
பொன்னுள் உறு பவளம் போன்ற புணர்
முருக்கம்
என் உள் உறு நோய் பெரிது."
(திணைமாலை நூற்றைம்பது 67).

"கழுநர் சொல் அஞ்சி சென்றார் வருதல்
பகழி போல் உண்கண்ணாய் பொய் அன்மை
ஈண்டை
பவழும் சிதறியவை போலக் கோபம்
தவழும் தகைய புறவு."
(கார்நாற்பது 5).

"பவழமும் முத்தும் பளிங்கும் விரைஇ
புகழ கொணர்ந்து புறவு அடுக்கும் முன்றில்
தவழ் திரைச் சேர்ப்பன் வருவான்கொல் தோழி
திகழும் திரு அமர் மார்பு."
(திணைமாலை நூற்றைம்பது 50).

* கணிமேதாவியார் ஒருவரே இயற்றிய திணைமாலை நூற்றைம்பது பாடல்கள் 42, 66, 67 இல் பவளம் எனவும், பாடல் 50 இல் பவழம் எனவும் ஆளப்பட்டுள்ளது.

"அவசமுற்று உளம் நெகத் துயில் நெகப் பவள
வாய்
அணி சிவப்பு அற விழி கடை சிவப்பு உற நிறை
கவசம் அற்று இள நகை களிவர களிவரும்
கணவரைப் புணருவீர் கடை திறந்திடுமினோ!"
(கலிங்கத்துப்பரணி 33).

"பரு மா மதக் கரியோடு அரி இழியும் விரிசாரல்,
குரு மா மணி பொன்னோடு இழி அருவிக்
கொடுங்குன்றம்
பொரு மா எயில் வரைவில் தரு கணையின்
பொடி செய்த
பெருமான் அவன் உமையாளொடும் மேவும்
பெரு நகரே."
(ஞானசம்பந்தர் தேவாரம் 144).

உரை: பெரிய கரிய மத யானைகளும் அரிமாக்களும் இரைதேடவும், நீர் பருகவும் இறங்கிவரும் பெரிய மலைச்சாரலையும், நிறம் பொருந்திய பெரிய மணிகளைப் பொன்னோடு சொரியும் அருவிகளையும் உடைய கொடுங்குன்றம், தன்னோடு பொரவந்த பெரிய முப்புரக் கோட்டைகளை மலை வில்லில் தொடுத்த கணையால் பொடியாக்கிய சிவபிரான் உமையம்மையோடு எழுந்தருளிய பெருநகராகும்.

* குரு மா மணி = நிறம் பொருந்திய பெரிய மணிகள்.

"திருமாலிருஞ்சோலை மலை என்றேன்
என்னத்
திருமால் வந்து என் நெஞ்சு நிறையப்
புகுந்தான்
குரு மா மணி உந்து புனல் பொன்னி தென்–
பால்
திருமால் சென்று சேர்விடம் தென் திருப்பேரே"
(நாலாயிரத் தெய்வப் பனுவல் 3968).

குரு (செந்நிறம்) – coral.

coral (n.)

general name for the hard, calcareous skeleton excreted by certain marine polyps, c. 1300, from Old French coral (12c., Modern French corail), from Latin corallium, from Greek korallion, a word perhaps of Semitic origin (compare Hebrew goral "small pebble," Arabic garal "small stone").

Originally especially the red variety found in the Mediterranean, used ornamentally, hence "red, the (red) color of coral" (mid–15c.). As an adjective, "made of coral," mid–15c. The coral–snake (1760) is so called for the red zones in its markings. Coral–reef is attested from 1745 (see reef (n.1)).

*****



# அவம்: வள்ளுவ மானுடச் சிதைவுப் பொருண்மை

பேரா. முனைவர் ப. கொழந்தசாமி,
அரசினர் ஆய்வு நிறுவனம், புதுச்சேரி.

பேச்சொலிகளால் சொற்களும் சொற்களால் தொடர்களும் ஆக்கப்பட்டுக் கருத்து / உணர்ச்சிப் பரிமாற்றம் நிகழ்த்தப்படுகின்றது. சொற்கள் எண்ணங்களையும் செய்திகளையும் வெளிப்படுத்துகின்றன. அதனால் ஒவ்வொரு சொல்லிலும் புதைந்துள்ள மனிதவளப் பொருண்மையைக் கூர்ந்து அறியவேண்டும். அதனால் வாழ்க்கை வளப்படும்.

மானுட மேம்பாட்டை வகுத்துரைக்கின்ற வள்ளுவம் அவம் என்னும் பெயர்ச்சொல்லால் சிதைந்து விடாதே என்னும் எச்சரிக்கையை விடுக்கின்றது. தவம், அறநெறி ஆகியவை வளத்தை மிகுவிப்பன; அவம் என்பது பயன்தராத, கேடு விளைக்கின்ற செயல்பாடு. அதனால்,

தவமும் தவமுடையார்க்கு ஆகும் ; அவம் அதனை
அஃதிலார் மேற்கொள் வது ( 262)

என்னும் குறட்பாவில் முன்னேற்றச் சிந்தனையும் நேர்மறை அணுகுமுறையும் வாழ்க்கையை வளப்படுத்தும். வீண் முயற்சியாலும் பொருத்தமற்ற அணுகுமுறையாலும் பயன் விளையாது என்று முன்னேற்றச் சிந்தனையை வலியுறுத்துகின்றது. அடுத்து,

தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்; மற்றல்லார்
அவம் செய்வார் ஆசையுட்பட்டு (266)

என்று, பேராசையால் தவறான போக்கில் சென்றால் சிதைவும் கேடும் நேரும் என்று எச்சரிக்கின்றது.

இங்கு, தவம் என்பதை முன்னேற்ற நல்வாய்ப்பு / நேர்மறை அணுகுமுறை என்றும், அவம் என்பதை பயனற்ற முயற்சி/ கேடு என்றும் தெளியலாம்.

இவ்வாறு திருக்குறளின் ஒவ்வொரு சொல்லிலும் புதைந்துள்ள மனிதவளக் கருத்துகளை நோக்கி அறியின், தடுமாற்றமற்ற நிலைத்த நீடித்த வளமான இன்வாழ்க்கை வசப்படும்.

நன்றி : இணையத் தரவுகள்.

# சொற்குவை மாணவத் தூதுவர் / இளம் அகராதியியலாளர் பயிற்சி

தமிழ்நாடு அரசு, தமிழ்வளர்ச்சித்துறை, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் சார்பில் 05.08.2025, 06.08.2025 ஆகிய இருநாள்கள், கிருட்டினகிரி – அரசு மகளிர் கலைக் கல்லூரி அரங்கத்தில் "சொற்குவை மாணவத் தூதுவர் / இளம் அகராதியியலாளர் பயிற்சி" நடைபெற்றது.

கல்லூரி மாணவர்களின் தமிழ்கலைச்சொல்லாக்கத் திறனை வளர்த்தல், தூயதமிழ்ப் பயன்பாட்டை ஊக்குவித்தல், சொற்குவை வலைத்தளப் பயனாளர் எண்ணிக்கையைப் பரவலாக்கல் உள்ளிட்ட இலக்குகளின் அடிப்படையில் தமிழ்நாடு அரசின் சீரிய நெறிப்படுத்தலின்கீழ், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் சார்பில் "சொற்குவை மாணவத் தூதுவர் / இளம் அகராதியியலாளர் பயிற்சி" வழங்கப்பட்டுவருகிறது.

இப்பயிற்சியில் அகரமுதலி இயக்கக இயக்குநர் (மு.கூ.பொ.) திருமதி க. பவானி அவர்கள் நோக்கவுரையாற்ற, கல்லூரி முதல்வர் முனைவர் சௌ.கீதா அவர்கள் தலைமையேற்றுச் சிறப்புரையாற்றினார்.

தமிழ்த்துறைத் தலைவர் (பொ.) முனைவர் ம.கல்பனா வரவேற்புரை வழங்க, கணினி அறிவியல் துறைத் தலைவர் முனைவர் து. லாவண்யா அவர்கள் வாழ்த்துரை வழங்கினார்

இப்பயிற்சி நிகழ்வில், கல்லூரி முதல்வர் முனைவர் சௌ.கீதா அவர்கள் 'கலைச்சொல்லாக்கம்' என்னும் பொருண்மையிலும், தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் க.சிவகாமி அவர்கள் 'அகராதியியல்' என்னும் பொருண்மையிலும், கணினி அறிவியல் துறைத் தலைவர் முனைவர் து. லாவண்யா அவர்கள் 'கணினித் தமிழ்' என்னும் பொருண்மையிலும், அரசு ஆடவர் கலைக்கல்லூரி தமிழ் விரிவுரையாளர் முனைவர் தா. பேகம் அவர்கள் 'மொழிப்பயிற்சி' என்னும் பொருண்மையிலும் மாணவர்களுக்குப் பயிற்சியளித்தனர்.

அகரமுதலி இயக்ககப் பதிப்பாசிரியர்கள் முனைவர் மா.பூங்குன்றன் அவர்கள் 'சொற்பிறப்பியல்' குறித்தும், முனைவர் தி.பாலசுப்பிரமணியன் அவர்கள் 'மொழிபெயர்ப்பு' குறித்தும் மாணவர்களுக்குப் பயிற்சியளிக்க, தொகுப்பாளர் திருமதி கு. சங்கீதா நன்றியுரை கூறினர்.

மாணவர்கள், பேராசிரியர்கள், தமிழார்வலர்கள் உள்பட பலர் கலந்துகொண்ட இவ்விரு நிகழ்விலும் பங்கேற்றுப் பயிற்சிபெற்ற மாணவர்களுக்கு அகரமுதலி இயக்ககம் சார்பில், "சொற்குவை மாணவத் தூதுவர்/ இளம் அகராதியியலாளர்' சான்றிதழ்கள் வழங்கப்பட்டன.

# பயிற்சியில் பங்கேற்ற மாணவர்கள்















# அகரமுதலி இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 185,186–ஆம் கூட்டங்கள்







தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 185, 186ஆம் கூட்டங்கள் முறையே 22.07.2025, 29.07.2025 ஆகிய இருநாள்கள் நடைபெற்றன.

அகரமுதலி இயக்கக இயக்குநர் (மு.கூ.பொ.) திருமதி க. பவானி அவர்கள் தலைமையில் நடைபெற்ற கூட்டங்களில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் இரா.கு. ஆல்துரை, திரு. அ. மதிவாணன் 'அறிவியல் ஒளி' திங்களிதழ் ஆசிரியர் திரு.நா.சு.சிதம்பரம் ஆகியோர் பங்கேற்றனர். 186ஆம் கூட்டத்தில் முனைவர் கு. பாலசுப்பிரமணியன், நூல் மதிப்புரையாளர் கவிஞர் மெய்ஞானி பிரபாகர பாபு, எதிர்காலத் தமிழ் எழுத்தமைப்பு நூலாசிரியர் திரு.ஆ.அரங்கநாதன், சென்னை –அரசு சித்த மருத்துவக் கல்லூரி விரிவுரையாளர் மரு.அர.வரலட்சுமி மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் பங்கேற்றனர். இவ்விரு கூட்டங்களிலும் சேர்த்து மொத்தம் 610 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

ஏற்பளிக்கப்பெற்ற கலைச்சொற்களுள் சில :

| | |
|---|---|
| Advertising agency | விளம்பர முகமை |
| Audio alert system | ஒலி எச்சரிக்கை முறை |
| Auditory signal | ஒலிக்குறிப்பு |
| Behind the ear hearing aid | பின்மடல் காதுக் கருவி |
| Care giver grant | பேணுகையர் மதிப்பூதியம் |
| Day care centre | பகல் பேணுகை நடுவம் |
| Feeding grant | உணவூட்டு நல்கை |
| Plastic calipers | நெகிழி இடுக்கியளவி |
| Sign language interpreter | செய்கை மொழிபெயர்ப்பாளர் |
| Anti–skid tile | வழுக்காத் தரை ஓடு |
| Aviation wing | விண்ணூர்திப் பிரிவு |
| E–governance project | மின் ஆளுமைத் திட்டம் |
| M–sand | செயற்கை மணல் |
| Raised letters | புடைப்பு எழுத்துருக்கள் |
| Sliding door | நழுவு கதவு |
| Tactile tiles | தடமறி ஓடுகள் |
| Cycle lane | சுழற்சிப் பாதை |
| Fire exit | தீ இடர் வழி |
| Global Positioning System | உலகளாவிய இடங்காண் குறியமைப்பு |
| Green roof | பசுமைக் கூரை |
| Hat trick | தொடர் மூவெற்றி |
| Heptathlon | ஏழாட்டப் போட்டி |